# இயலிசை

தனி பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ 10/-
அரையாண்டு சந்தா ரூ 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
V. தமிழ்ராசன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 1 1-8-82 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை இதழ் 6, 7


# இயலிசை இதழுக்கு எமது வாழ்த்து!



## நேரிசை வெண்பா

மேவு சிதம்பரம் மீனாட்சி சுந்தரம்
ஓவில் இயலிசை ஓங்குக-பூவுலகில்
எங்கும் இசைவாணர் இன்பநலம் எய்தியே
மங்களமாய் வாழ்க மகிழ்ந்து

தருமபுரி
26—6—82

அன்புள்ள,
கிருபானந்தவாரி

## சென்னை வானொலி நிலையத்திற்கு புது இயக்குநர் திரு E. கோவிந்தராஜுலு, M.A.

இதுவரை சென்னை வானொலி இயக்குநராக இருந்த சத்தியா பாமா ஓய்வு பெற்றுள்ளார். புதிய இயக்குநராக சென்னை விவதபாரதி வர்த்தக ஒலிபரப்பு இயக்குநராக பணியாற்றிய E. கோவிந்தராஜுலு M. A. பதவி ஏற்றுள்ளார். இவர் சேலம் மாவட்டத்தைச்சேர்ந்தவர்.

விஜயவாடா, திருச்சி, அந்தமான், நெல்லை, திருச்சூர் டெல்லி ஆகிய வானொலி நிலையங்களில் பணியாற்றியவர் நல்ல எழுத்தாளர் அனைவரிடமும் அன்புடன் பழகுவார். விவதபாரதியில் திறம்பட பணியாற்றியதற்கு இவரைப் பாராட்டி 'இயலிசை' முதல் இதழில் குறிப்பு வெளிவந்தது வாசகர்கள் நினைவில் இருக்கலாம். இவரது சேவை சென்னை வானொலிக்கு மிகவும் தேவை. 'இயலிசை'யின் வாழ்த்துகள்!

## திருமண வாழ்த்து

● பிரபல தவில் கலைஞர் வலையப்பட்டி A. R. சுப்பிரமணியம் தம்பி A. R. தங்கவேலுவுக்கும் கோவை இராமநாதபுரம் பி. ரகுபதி முதலியார் மகள் அன்ன லட்சுமிக்கும் 27-6-82 அன்று கோவையில் திருமணம் நடைபெற்றது. திருமண விழா விழாவிற்கு குன்னக்குடி வைத்தியநாதன் வயலின் கச்சேரி நடைபெற்றது.

● திருப்புகழ் இசைவாணர் புரசை E. அருணகிரி மகள் லட்சுமிக்கும் பழநி கணக்கன்பட்டி R. பெருமாள் ஆச்சாரி அவர்களின் மகன் P. இராமசாமிக்கும் சென்னையில் 30-6-82 அன்று திருமணம் நடைபெற்றது.

மணமக்களுக்கு 'இயலிசை' வாழ்த்துகள்!

## சேலம் கலை வளர் மன்றம் திருக்குறளார் தொடர் சொற்பொழிவு

சேலத்தில் கலைவளர் மன்றம் என்று ஓர் மன்றத்தை கலை வளர்ச்சிக்கு துவக்கியுள்ளார் T. L நாகேந்திரன். இதில் பல இசை கலை நிகழ்ச்சிகளும் நடைபெறும். கடந்த 5-7-82 முதல் 12-7-82 வரை இம்மன்றம் திருக்குறளார் V. முனுசாமி அவர்களின் இலக்கியத்தொடர் சொற்பொழிவினை சேலம் கடை வீதி அருள்மிகு ஏகாம்பரேசுவரர் காமாட்சியம்மன் திருக்கோவிலில் நடத்தினர்.

கலைமன்றத்தைத் தொடர்பு கொள்ள முகவரி
T. L. நாகேந்திரன், செயலாளர்
35, கந்தசாமிதெரு, சேலம்-2

வீணை மேதை

## S. பாலச்சந்தருக்கு பட்டம் இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி வழங்கும்

சென்னையில் உள்ள பழமையான கலை மன்றங்களில் இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியும் ஒன்று. இதன் 50 ஆண்டு பொன்விழா இவ்வாண்டு டிசம்பர் இறுதியில் தியாகராயநகர் தென்னிந்திய நடிகர் சங்கம் சுவாமி சங்கரதாஸ் கலையரங்கில் நடைபெறும்.

இக்கலைவிழாவிற்கு வீணைக் கலைஞர் S. பாலச்சந்தர் தலைமை வகிக்கின்றார். அவருக்கு விழாவில் "சங்கீத கலா சிகாமணி" என்ற பட்டம் வழங்கப்படும். இவர் ஏராள இசைத்தட்டுகள் கொடுத்தவர். இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் நிறைய வீணைக் கச்சேரிகள் செய்து புகழ் பெற்றவர். டிசம்பர் சென்னை இசை விழா பருவத்தில் Music Season முதன் முறையாக இவ்விருது பெறுகின்றார் இவரது திரைப்படத் துறை ஆற்றலைப்பற்றி சென்ற இதழில் ஒருதலை பலராகம், என்ற தலைப்பில் குறிப்பிட்டிருந்தது வாசகர்கள் நினைவில் இருக்கலாம்.

பொன் விழாவினைச் சிறப்பாக நடத்த சொஸைட்டி தலைவர் V. M. பெருமாளுர் செட்டி செயலாளர் N. இராமச்சந்திரன் ஏற்பாடுகள் செய்து வருகின்றனர்.

## திருவொற்றியூர் பட்டினத்தார் திருநட்சத்திர வெள்ளி விழா



சென்னை மூர் அங்காடியிலுள்ள ஓம் கங்கை விநாயகர் அருள் நெறித்திருக்கூட்டம் ஆண்டு தோறும் பல திருவிழாக்களை நடத்தி இசைத் தொண்டும் செய்துவருகின்றனர். அவர்கள் திருவொற்றியூரில் நடத்தும் பட்டினத்தார் திரு நட்சத்திர விழா இவ்வாண்டு 25 ஆண்டு வெள்ளி விழா; வரும் 3-8-82 செவ்வாய் அன்று பட்டினத்தார் ஆலயத்தில் நடைபெறவுள்ளது. விழாவில் மயிலை குருஜி சுந்தரராம சுவாமிகள், திருமுருக கிருபானந்த வாரியார் பண்டித நடேசனார், செல்வி கிரிஜா, தவத்திரு கன்னியப்பசுவாமிகள் கருமாரிதாசன், சங்கரநாராயணன், ஆகியோர் சொற்பொழிவு இசைச்சொற்பொழிவு ஆற்றுகின்றார்கள். செயலாளர் N K. தருமலிங்கம் வரவேற்புரையாற்றுவார்.

காலையில் தருமபுரம் P. சுவாமிநாதன், புரசை E. அருணகிரி அவர்கள் இன்னிசையும், மதியம் P.G கதிர்வேல் நாதசுரமும் J. வேணுகோபால் பாகவதர் காலட்சேபமும், இரவு 7 மணிக்கு சீர்காழி S. கோவிந்தராசன் குழுவினர் இன்னிசையும் நடைபெறும்.

## பிருந்தாவன் பூங்காவில் இசை ஊற்று!

இசை, தண்ணீர், வர்ணம் மூன்றும் கலந்து கப்பிபூடரில் இயங்கும், இசை - ஒளி - நீர் ஊற்று மைசூர் பிருந்தாவன் பூங்காவில் வரும் நவம்பர் மாதத்தில் அமைக்கப்பட உள்ளது. உலக கன்னட சம்மேளனத்தை ஒட்டி பிருந்தாவன் பூங்காவை புதுப்பிக்கும் ரூ. 87 லட்ச திட்டத்தில் இந்த இசை ஊற்றும் சேர்ந்துள்ளது. இது எவ்வாறு இயங்கி மக்களை மகிழ்விக்கும் என்பது அடுத்த நவம்பரில் தெரியும்.

# அருள்மிகு
# நவசக்தி விநாயகராலயம்

மயிலை லஸ், சென்னை-4



## விநாயக சதுர்த்தி விழா கலைநிகழ்ச்சிகள்

| 82 ஆகஸ்டு | இரவு | |
|---|---|---|
| 21 | 7 | V. பத்மாவதி குழுவினர் வீணை |
| | 9 | 'கலைமாமணி' சுப்பு ஆறுமுகம் குழுவினர் 'வள்ளி திருமணம்' வில்லுபாட்டு |
| 22 | 7 | விஜயகல்பகம் குழுவினர் வீணை |
| | 9 | திரு K. வீரமணி, ராதா மெல்லிசை |
| 23 | 7 | தாசாஞ்சலி M. D. சீனுவாசன் தேசிய ஒருமைப்பாட்டு பாடல்கள் |
| | 9 | திரு பித்துகுளி. திருமதி சரோசா பித்துகுளி இன்னிசை |
| 24 | 7 | கோவை S. P. இராமரத்னம் குழுவினர் இன்னிசை |
| | 9 | T. K. S. கலைவாணன் குழுவினர் இன்னிசை |
| 25 | 7 | ரமாமணி வெங்கடேசன் பக்திபாடல்கள் |
| | 9 | 'ஆறுபடைவீடு' நாட்டிய நாடகம் குடந்தை கணநாதர் பாவை நாடகக்குழு |
| 26 | 7 | S. சிவராமகிருஷ்ணன் குழுவினர் இன்னிசை |
| | 9 | ஆனந்த அனுராக் குழுவினர் மெல்லிசை |
| 27 | 7 | சந்திரன் பாபுவின் நகைச்சுவை நாடகம் |
| | 9 | திருப்பரங்குன்றம் K. T. ஜெயலட்சுமி குழுவினர் இன்னிசை |
| 28 | 7 | காரைக்குடி திருமதி M. L வள்ளியம்மை பக்திப்பாடல் |
| | 9 | திரு A. M. ராஜா, ஜிக்கி குழுவினர் மெல்லிசை |

## வடபழனி திருப்புகழ் சபை அருணகிரிநாதர் இசை விழா

சென்னையில் வருடந்தோறும் இரண்டு அருணகிரிநாதர் சிறப்புடன் நடைபெற்று வருகின்றது. குடியரசு தினத்தன்று அடியார் திருக்கூட்ட இறைபணி மன்றம் சென்ன கேசவ மல்லீசுவரர் ஆலயத்தில் நடத்துகின்றனர். சுதந்திர தினத்தன்று வடபழநி திருப்புகழ் சபையினர் வடபழநியாண்டவர் ஆலயத்தில் நடத்துகின்றனர். வடபழநி திருப்புகழ்சபையினர் தங்கள் 10-வது ஆண்டு அருணகிரிநாதர் இசை விழாவினை வரும் ஆகஸ்டு 14, 15, 16 தேதிகளில் கொண்டாட ஏற்பாடுகள் செய்து வருகின்றனர். பல பிரபல இசைவாணர்கள் பாட உள்ளனர்.

## வேலூர் ஜலகண்டேசுவரர் திருக்கோவில் குடமுழுக்கு விழாவில் கலைநிகழ்ச்சிகள் சிறப்பு

கடந்த 8-7-72 வேலூர் கோட்டையிலுள்ள அருள்மிகு ஜலகண்டேஸ்வரர், அருள்மிகு அகிலாண்டேஸ்வரி திருக்கோவில் குடமுழுக்கு விழா மிகவும் சிறப்பாக பல சமயத்தலைவர்கள் ஆன்றோர்கள் முன்னிலையில் நடைபெற்றது. 5 நாட்கள் நடைபெற்ற கலை நிகழ்ச்சிகளில் நாமகிரிப்பேட்டை, கிருஷ்ணன், நாதசுரம் திருமுருக கிருபானந்தவாரியார் இசைச் சொற்பொழிவு, சீர்காழி கோவிந்தராசன், மதுரை சோமு, M. R. விசயா, குன்னக்குடி பாலா குழுவினர்கள் இன்னிசை, நடராசா நாட்டிய கலாமன்றம் 'சிவதாண்டவம்' நாட்டிய நாடகம் இவைகள் இடம்பெற்றன. குடமுழுக்கு விழாவிற்கும், கலை நிகழ்ச்சிகளுக்கும் ஏராள கூட்டம் வந்திருந்தது. இந்த குடமுழுக்குவிற்குப் பின் வேலூருக்கு தனிக்களை கூடியுள்ளது. கோவில் அறங்காவலர்கள் இன்னும் ஏராள கலைநிகழ்ச்சிகள் உற்சவ நேரங்களில் ஏற்பாடு செய்ய உள்ளனர். வளர்க அவர்கள் தொண்டு!

## மயில... [torn] ...ழுவினர்

கடந்த 8-7-82 அன்று சென்னை மயிலாப்பூர் கற்பகாம்பாள் கபாலீசுவரர் திருக்கோவில் குடமுழுக்கு விழா மிகவும் சிறப்பாக நடைபெற்றது. போற்றும் வண்ணம் பல அமைந்திருந்தன. 'இயலிசை' அன்பர்கள் மகிழும் வண்ணம் விழா குழுவினர் தமிழ் நாடெங்கும் உள்ள தலை சிறந்த ஓதுவா மூர்த்திகளை அழைத்து 4 நாட்கள் திருமறை இசைமணம் பெருக்கினர்.

திருவாளர்கள்

| | |
|---|---|
| தருமபுரம் P. சுவாமிநாதன் | லால்குடி M. சுவாமிநாதன் |
| ,, S. தண்டபாணி | மயிலை ம. சி. கபாலி |
| ,, வேலாயுத ஓதுவார் | ,, ம. சி. பொன்னுவேலு |
| காஞ்சிபுரம் ஆ. விநாயக முதலியார் | திருவாரூர் மு. சுப்ரமணிய முதலியார் |
| ,, புலவர் புண்ணியகோடி | திருமருகல் V. சோமசுந்தரம் |
| ,, C. வரத ஓதுவார் | புதுவயல் T. ரெத்னசபாபதி |
| திருவாவடுதுறை விசுவலிங்கம் | திருச்சி முத்து கந்தசாமி தேசிகர் |
| ,, சபாபதி | குடந்தை V. லட்சுமணன் |
| ,, து. சோமசுந்தர தேசிகர் | வடபழநி N. ஆறுமுகம் |
| பழநி M. குமாரசாமி | திருச்செந்தூர் S. நமச்சிவாயம் |
| ,, பாலசந்திரன் | திருநள்ளாறு வடுகநாதன் |
| சைதை R. நடராசன் | திருக்கடவூர் சிவப்பிரகாச தேசிகர் |
| ,, R. பாலசுந்தரம் | ராமேஸ்வரம ரகுநாத தேசிகர் |
| சென்னை S. ஞானப்பிரகாசம் | திருத்தணிகை N. சுவாமிநாதன் |
| ,, E. M. வேதாசலம் | சுவாமிமலை பஞ்சநத தேசிகர் |
| திருக்கனர் தி. சுப்பையா தேசிகர் | கோவூர் குமாரசாமி ஓதுவார் |
| ,, தி. சபாரத்ன தேசிகர் | திருவேற்காடு வேதய்யன் |
| ,, சு. நாகநாதன் | மற்றும் பல ஓதுவா மூர்த்திகள் |

தவிர தற்பொழுது நடந்து கொண்டிருக்கும் மண்டலாபிஷேகத் திருவிழா 48 நாட்களுக்கும் இசை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்துள்ளனர். வெளியூரில் இவ்வாறு நடத்துவது எளிதல்ல. மயிலாப்பூர் இசைக்கலைஞர்களின் இருப்பிடமாதலால் சுலபமாக இசை நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்கின்றனர். எனினும் விழாக்குழுவினரின் ஆர்வத்தையும், சாதனையையும் பாராட்டாமல் இருக்க முடியாது. மயிலை ரசிகர்கள் கொடுத்து வைத்தவர்கள்.

## நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் இலங்கையில் பட்டம் பெற்றார்

இலங்கையில் தலைமன்னார் அருகில் உள்ள திருக்கேதீசுவரம் கோவிலில் தெப்பத் திருவிழா நடந்தது. நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன் இந்த விழாவில் நாதசுரம் வாசித்தார். அவருக்கு விழாக்குழுவின் சார்பில் பொன்னாடை போர்த்தி 'உலக நாதசுர ஜோதி' என்ற பட்டமும் கொடுத்தார்கள் எங்கள் வாழ்த்துக்கள்.

## 'நம்பினால் நம்புங்கள்' கங்கை அமரன் இசை கைகொடுக்கின்றது

சுரேஷ் சித்ரா கம்பெனியார் 'நம்பினால் நம்புங்கள்' திரைப் படம் கலகலப்பாக தமிழகத்தில் பவனி வந்து கொண்டுள்ளது. K. B. ஸ்ரீராம் கதை வசனத்தை வைத்து M.S. கோபிநாத் சுறுசுறுப்பாக படத்தை இயக்கியுள்ளார். இசை கங்கை அமரன் நான்கு பாடல்களும் நன்றாக உள்ளன. சுரேஷ்-சாந்தி ஜோடி பாடும் அம்பிகாபதி பாடல்கள் கொட்டகையில் கைதட்டல் பெறுகின்றது. மல்லி கொத்தமல்லி-பாடலில் கங்கை அமரன் ரசிகர்களை கவர்கின்றார் நிறைய பாடகர்களையும் பாட வைத்துள்ளனர். படம் வெற்றிக்கு இசையும் கைகொடுக்கின்றது எனலாம், கதை 'நம்பினால் நம்புங்கள்' இருந்தாலும் சரிதாவின் முன் ஜென்மம் காட்டாதது ரசிகர்களுக்கு குறையே! காட்டியிருந்தால் இன்னும் ரசிகர்களைப் படம் கவர்ந்து இருக்கலாம்.

## கற்பகாம்பாள் சுப்ரபாத இசைச்சுட்டி வெளியீடு

மயிலை கபாலீசுவரர் ஆலய குடமுழுக்கு விழாவில் AVM மியூசிக் சர்வீசு இசைச்சுட்டி (காசட்) வெளியீட்டாளர்கள் டாக்டர் M L வசந்தகுமாரி பாடிய கற்பகாம்பாள் சுப்ரபாதம் இசைச்சுட்டியை வெளியிட்டனர். உயர்நீதிமன்ற நடுவர் திரு V. பாலசுப்ரமணியம் இதனை வெளியிட்டு பாராட்டுரை வழங்கினர், மூவர்ண முகப்புடன் இசைச்சுட்டி சிறப்பாக உள்ளது. இசையும் தரமாக உள்ளது. 'இயலிசை' வாழ்த்துக்கள்.



## ...ாலமலை
## அருணகிரிநாதர்
## 32-ம் ஆண்டு விழா
### கலை நிகழ்ச்சிகள்

30—7—82 காலை 9 மணி

அம்புக்கோவில் N. நல்லகுமார் குழுவினர் நாதசுரம்

மாலை 6 மணி காரவடிசேக் சின்னமௌலானா நாதசுரம்

இரவு 9 மணி மதுரை திரு S. சோமசுந்தரம் நாதசுரம் குழுவினர் இன்னிசை

31—7—82 காலை 9 மணி

நீடாமங்கலம் A. V. சண்முகவடிவேல் குழுவினர் நாதசுரம்

மாலை 5-30 திருவிழா R. ஜெய்சங்கர் நாதசுரம்

வலையபட்டி A. R. சுப்ரமணியம் - தனித்த வில்

திருப்பதி C. M. இராசகோபால்

இரவு 8 மணி சேலம் குமாரி நீலா பாலகிருஷ்ணன் குழுவினர் நாட்டியம்

9 மணி சீர்காழி கோவிந்தராஜன் குழுவினர் இன்னிசை

1—8—82 காலை 9 மணி

மகாதானபுரம் மருதமுத்து குழுவினர்

நீடாமங்கலம் K. R. சின்னையா குழுவினர் நாதசுரம்

மாலை 7 மணி டாக்டர் M. பாலமுரளிகிருஷ்ண குழுவினர் இன்னிசை

இரவு 9 மணி குன்னக்குடி R. வைத்யநாதன் வயலின்

வலையபட்டி A. R. சுப்ரமணியம் தவில்

விழாவினை புதுக்கோட்டை மாவட்ட ஆட்சித்தலைவர் திரு S. T. காசிராஜன், I.A.S. துவக்கி வைப்பார்

காவல்துறை துணைத்தலைவர் G. துரைராஜ் I.P.S., மதுரை அருள்மிகு மீனாட்சியம்மன் திருக்கோவில் அறங்காவலர் தலைவர் திரு V. N. சிதம்பரம், பெங்களூர் T. K. நாகம்மாள் ஆகியோர் கலந்து சொற்பொழிவு ஆற்றுவார்

## இசை அமைப்பாளர் V. குமார் குழு வெளிநாடு பயணம்

திரை இசையமைப்பாளர் V. குமார் தனது குழுவினருடன் சிங்கப்பூர், மலேசியா செல்கின்றார். இக்குழுவில் அவரது மனைவி பாடகி சுவர்ணா திரைப்பட பாடகர்கள் T. L. மகராசன், தீபன் சக்ரவர்த்தி இவர்களும் செல்கின்றனர். குமார் ஒரு மாதம் தங்கி அங்கு இசை நிகழ்ச்சிகள் நடத்தி 15-8-82 தேதியளவில் திரும்ப உள்ளனர். பயணம் வெற்றிகரமாக அமைய வாழ்த்துக்கள்!

## சென்னை இராமாமிருதம் பாகவதர் மறைவு

பழங்கலைஞர்களில் ஒருவர் சென்னை இராமாமிருதம் பாகவதர். இவர் இசைச் சொற்பொழிவு — கதா காலட்சேபம் நிறைய செய்து வந்தவர். மிருதங்கம் கஞ்சிராவும் நன்கு வாசிப்பார். M. K. தியாகராச பாகவதர் K. B. சுந்தராம்பாள் சிதம்பரம் செல்வரத்தினம் பிள்ளை உட்பட பல பெருங் கலைஞர்களுக்கும் துணைக்கருவிகள் வாசித்துள்ளார். இவரைத் தெரியாத இசைக் கலைஞர்களே கிடையாது. சமீபத்தில் ஒரு கச்சேரியில் கஞ்சிரா வாசித்துக் கொண்டிருக்கும்பொழுது மாரடைப்பு வரவே மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு அங்கு காலமானார். வயது 65 இருக்கும். அவருக்கு 'இயலிசை' அஞ்சலி!

## அருள்மிகு
## ஸ்ரீதேவி கருமாரியம்மன்
## ஆலயம்

சர்மா நகர், சென்னை-600 039

### ஆடித்திருவிழா கலை நிகழ்ச்சிகள்

மாலை 7 மணி

20—8—82 திரு பூபாலன் வாத்திய இன்னிசை

21—8—82 ICF ஹரிஹர பக்தஜன சபை பஜனை

22—8—82 குமாரிகள் K. விசயலட்சுமி, R. சித்ரா இன்னிசை

24—8—82 சிதம்பரம் திரு S. மீனாட்சிசுந்தரம் குழுவினர் இன்னிசை

25—8—82 திருமதி பத்மாசினி விசுவநாதன் குழுவினர் இன்னிசை

26—8—82 சைதை T. G. கோபால் இன்னிசை குழுவினர்

27—8—82 'ஞானேஸ்வர்' பாலநாட்டிய நாடகம்

28—8—82 திருமதி ராஜம் சாரநாதன் - இசைச்சொற்பொழிவு

29—8—82 திருமதி & திரு பித்துகுளி முருகதாசு இன்னிசை

## புதிய இசையமைப்பாளர்கள் இயக்கும் படங்கள்

பிரசாத் மூவி மேக்கர்சு என்ற கம்பெனி தங்கள் முதல் தயாரிப்பான 'நினைவுகள் மறைவதில்லை' என்ற திரைப்படத்தின் ஆரம்ப விழாவினை சமீபத்தில் AVM ஒலிப்பதிவு கூடத்தில் நடத்தினர். திரை இயக்குநர் S. பாலசந்தர் குத்து விளக்கு ஏற்றி பாடல் பதிவினை துவக்கி வைத்தார். இப்படத்தை R. M. K. N. ராஜன், R. லட்சுமணன் இவர்கள் தயாரிக்க விஜயசிங்கம் என்ற மலேசியா காரர் இயக்குநராக பொறுப்பு ஏற்றுள்ளார். கதை, வசனம் S. வைரக்கண்ணு. கவிஞர் வைரமுத்து பாடல்களுக்கு புது இளம் இசை அமைப்பாளர் M.S.V. ராஜா இசை அமைக்கின்றார். அவருக்கு இயலிசை வாழ்த்துக்கள்!

ஹஸ்மத் ஆர்ட் பிலிம்சு என்ற நிறுவனம் தயாரிக்கும் 'ராதையின் நெஞ்சம்' என்ற திரைப்படத்திற்கும் புது இசை இயக்குநர் மனோரஞ்சிதம் ஒப்பந்தமாகியுள்ளார். படத்திற்கு கதை, வசனம் P. S. அரசன் எழுத T. K. லோகநாதன் டைரக்ட் செய்கின்றார். தயாரிப்பு S. ஹபீஸ், K. ரங்கசாமி இவருக்கும் 'இயலிசை' வாழ்த்துக்கள்!

'கற்பகச்சோலை' என்ற படத்தினை முத்து சினி கிரியேஷன்ஸ் தயாரிக்கின்றனர். இதன் ஆரம்ப விழா கற்பகம் ஸ்டுடியோவில் திருமதி K. S. கோபாலகிருஷ்ணன் தலைமையில் நடந்தது. இதற்கு திரைக்கதை வசனம் பாபு எழுத V. K. சசி டைரக்ட் செய்ய ஆல்பர்ட் கிரி என்ற புது இசை இயக்குநர் இசையமைக்கின்றார். நமது வாழ்த்துக்கள்!

## பாடல் பெற்ற தலங்கள் யாத்திரை ஓதுவா மூர்த்திகள் ஏற்பாடு

தமிழ்நாடு தேவார ஓதுவா மூர்த்திகள் சங்கம் பாடல் பெற்ற ஐம்பது தலங்களுக்கும் மேற்பட்ட ஊர்களுக்கு யாத்திரை செல்ல உள்ளனர். 8-8-82 காலை 6 மணிக்கு சென்னை, சைதாப்பேட்டை திருக்காரணீசுவரர் ஆலயத்திலிருந்து கிளம்பி 5 நாள் கழித்து திரும்புவர். உடன் செல்ல விரும்பும் அன்பர்கள் பேருந்து கட்டணம் ரு 175 செலுத்தி செல்லலாம். விபரங்களுக்கு தமிழ்நாடு தேவார ஓதுவா மூர்த்திகள் சங்கம், கிருஷ்ணப்ப நாயக்கன் தெரு, மேட்டுபாளையம், சென்னை-33 என்ற விலாசத்திற்கு தொடர்பு கொள்ளலாம்.

திருத்தல யாத்திரை இனிதாக நடைபெற 'இயலிசை' வாழ்த்துக்கள். சுற்றுலா வரும் ஓதுவா மூர்த்திகளுக்கு தலங்களில் சீரிய வரவேற்பு கொடுக்க அன்பர்களை வேண்டிக் கொள்கின்றோம்!

## சங்கர் கணேசுக்கு வெள்ளிரத பரிசு! பம்பாய் நட்சத்திர கலை விழா

பம்பாய் சண்முகானந்த கலை அரங்கில் 'மராட்டிய முரசு' 3-வது ஆண்டு விழாவினை நட்சத்திர கலைவிழாவாகக் கொண்டாடினர். இதில் சங்கர், கணேசு தனது குழுவினருடன் சென்று இசை விருந்து அளித்தனர், பாடகர்கள் T. M. S. மலேசியா வாசுதேவன், வாணி ஜெயராம், லதா, மணிமாலா ஆகியோர் பாடினார்கள். நடிகர்களும் பலர் கலந்து கொண்டனர். கலைவிழாவிற்கு T. V. இராமானுஜம் தலைமை தாங்கினர். பிரபல தமிழ் பிரமுகர் வரதராச முதலியார் கலைஞர்களுக்கு வெள்ளித் தட்டுகள் வழங்கினர். சங்கர் கணேசுக்கு வெள்ளி ரதங்கள் வழங்கினர்.

TN/MS/(S)/260
'Iyalisai' Musical Tamil Bi-Monthly Printed by T. Thirunavukkarasu at Jayalakshmi Art Printers, Kavarai Street, Vadapalani, Madras-26 and Edited and Published by M. Lakshmi, 57, South Sivan Koil Street, Kodambakkam, Madras-24




சென



# திண்டுக்கல் அருள்மிகு வெள்ளை விநாயகர் 27-ம் ஆண்டு சதுர்த்தி விழா

## கலை நிகழ்ச்சிகள்

திண்டுக்கல் கிழக்குரத வீதியில் அ. பெரியண்ண முதலியார் நினைவு கலையரங்கில் தினசரி இரவு 9 மணிக்கு துவங்கும்

ஆகஸ்டு - 82

5—8—82 திண்டுக்கல் P. கண்ணுசாமி-நாதசுரம். S. கந்தசாமி தவில் இரவு 11 மணி தேவகோட்டை, N. R. சந்திரன் P. தியாகராஜன் நாதசுரம்
6—8—82 நாகை நடராசன் குழுவினர் இன்னிசை
7—8—82 சென்னை விஜயலட்சுமி, பாக்கியலட்சுமி இன்னிசை
8—8—82 மதுரை M. P. சரகுவதி குழுவினர் நாதசுரம்
9—8—82 பிச்சாண்டார் கோவில் பாலசுப்ரமணியம் இசைச்சொற்பொழிவு
10—8—82 கரந்தை சுப்புலட்சுமி-வில்லுபாட்டு
11—8—82 சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம் குழுவினர் இன்னிசை
12—8—82 தஞ்சை V. ஜெயஸ்ரீ குழுவினர் "
13—8—82 சுவாமிமலை P. V. [illegible] S. நடராசன் நாதசுரம்
14—8—82 வழக்காடு மன்றம் [illegible] சத்தியசீலன், M.A.
15—8—82 சென்னை C. V. பானுமதி, C. V. கிரிஜா இன்னிசை
16—8—82 K. C. குருராமலிங்கம் குழுவினர் "
17—8—82 அபிராம் A. கணேசன் நிர்த்தியம் T. R. கோவிந்தராஜன், V. B. பாலசுப்ரமணியம் தவில
18—8—82 பெங்களூர் J. மாதவன் குழுவினர் இன்னிசை
19—8—82 மதுரை சுவாமிநாதன் "
20—8—82 சென்னை K. T. ஜெயலட்சுமி "
21—8—82 பட்டிமன்றம்; நடுவர்-குன்றக்குடி அடிகளார்
22—8—82 P. K. முத்துவீரசாமி, P. K. M. பாலசுப்ரமணியம் குழுவினர் நாதசுரம், M. R. வாசுதேவன், T. G. முத்துகுமாரசாமி தவில்
23—8—82 திண்டுக்கல் செல்லையா லாசரஸ் இன்னிசை 10 மணி திருச்சி ஏகானந்த சுவாமிகள் சொற்பொழிவு

## இராமேசுவரத்தில் ஆடித்திருக்கல்யாண உற்சவ கலை நிகழ்ச்சிகள்

இராமேசுவரம் அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோவில் 15-7-82 முதல் 25-7-82 ஆடி அமாவாசை மற்றும் திருக்கல்யாண உற்சவம் நடைபெற்றது. தினமும் சொற்பொழிவுகள் இசை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்திருந்தனர். மதுரை T. N. சடகோபன் 'ராகப்பிரியர்' M. K. கமலகுமாரி, கமலா நாராயணன்-வித்யா குழுவினர் சூல மங்கலம் சகோதரிகள், அங்கு விலாசு M. V. M. செல்லமுத்து விடாரிசை, திருப்பதி இசைக் கல்லூரி முதல்வர் D. பசுபதி, டெல்லி T. R. சுப்பிரமணியம், V. விஜயலட்சுமி, B. R. இராசகோபாலன் இவர்கள் இசை நிகழ்ச்சிகளும், சென்னை J. வசந்தியின் நடனமும், புலவர் கீரன் உட்பட பல புலவர்களின் சமய சொற்பொழிவும் நிகழ்ந்தன.

## சங்கரன் கோவில் ஆடித்தபசு விழா இசை நிகழ்ச்சிகள்

நெல்லை மாவட்டம் சங்கரன் கோவில் அருள்மிகு சங்கர நாராயணசாமி திருக்கோவிலில் ஆடித்தபசு விழா 24-7-82 முதல் 5-8-82 வரை நடைபெற்று வருகின்றது. தினமும் நாதசுரம், சொற்பொழிவு, இசை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்துள்ளனர்.

செந்தில் M. K. சின்ன சுப்பையா, M. S. இராமையா, M. S. மகாலிங்கம், K. சங்கரபாண்டியன் கம்பர் R. S. V. செல்லையா, T. P. R. கணேசன் ஆகிய நாதசுர கலைஞர்கள் வாசிக்கின்றனர்.

கோவை K. K. சுவாமிநாதன், தருமபுரம் P. சுவாமிநாதன் நெல்லை சகோதரிகள், பூதபாண்டி S. தங்கவேலு, கடையநல்லூர் மெல்லிசை குழுவினர், K. M. செண்பகநாதன், விநாயகா ஆர்ச்செஸ்டிரா-தென்காசி B. R. இராசகோபாலன், N. மகாலிங்கம், மதுரை அபிராமி R. N. மதியழகன் சகோதரர்கள் இசை நிகழ்ச்சிகளும் சென்னை செல்வி சாமுண்டீஸ்வரி நடனமும் விழாவில் இடம் பெற்றுள்ளன.

திருமுருக கிருபானந்தவாரியார், அம்பை சங்கரனார், எஸ். வெங்கடேச சர்மா, M. வெள்ளைபாண்டியன், இரா. தங்கபாண்டியன், கவிஞர் அறவாழி, வ. தி. சுப்பையா இவர்கள் விழா சொற்பொழிவாளர்கள்.

பக்தி பாடல்கள் பாடிய

## பெங்களூர் ரமணி அம்மாள் மரணம்

பெங்களூரைச் சேர்ந்த திருமதி ரமணி அம்மாள் 'பால மணக்குது - பழம் மணக்குது' என்ற பக்தி பாடல் இசைத்தட்டு மூலம் பிரபலமானவர். K. B. சுந்தராம்பாள் போன்று கணீரென்ற குரல் உடையவர். ஏராள இசை நிகழ்ச்சிகள் நடத்தினார். இசைத்தட்டுகள் பாடினார். 'தெய்வம்' என்ற திரைப்படத்தில் தானே தோன்றி 'குன்றத்திலே குமரனுக்கு கொண்டாட்டம்' என்று பாடி மக்களை மகிழ வைத்தவர். மலாயா, பர்மா, இலங்கை மற்றும் பல வெளிநாடுகள் சென்று பாடி வந்தவர். இவர் கடந்த மே மாதம் முதல் உடல்நலமின்றி பம்பாயில் தனது சகோதரர் வீட்டில் இருந்தார். கடந்த வாரம் முருகனடி சேர்ந்தார். சிறு வயதிலேயே கணவனை இழந்தவர். குழந்தைகள் கிடையாது. அவருக்கு எமது அஞ்சலி

## சென்னை நகர கலைமன்றங்கள் குழு நிர்வாகிகள் தேர்வு

சென்னை நகர மன்றங்கள் குழுவின் Guild of City Sabhas பொதுக்கூட்டம் சமீபத்தில் நடந்தது. கூட்டத்தில் கீழ்க்கண்டவாறு செயற்குழு நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவர் பி. வி. ஆறுமுகம்
(பிரபாத் கல்சுரல் அகடமி)
துணைத்தலைவர்கள்
C. N. சிதம்பரம்
(கோல்டன் ஆர்ட்ஸ் அகடாமி)
A. நடராசன்
(கிடப்பா கலை அரங்கம்)
K. S. மணி
(சீனுவாசா பைன் ஆர்ட்ஸ்)
பொதுச்செயலாளர்
P. S. முனுசாமி (அலங்கார்)
துணைச்செயலாளர்
சி. சந்தானம் (யூத் பாரடைஸ்)
பொருளாளர்
G. கணேசன்
(டென் ஸ்டார் அகடமி)
இவர்களுக்கு
இயலிசை வாழ்த்துக்கள்!

## நானும் ஒருவன்

அன்புள்ள ஆசிரியருக்கு,

தங்களின் 'இயலிசை இதழ்களைப் பார்க்கிறேன் நன்றி இசைக்கலைக்கென ஒரு இதழ் தொடங்கி, அதைத் தொடர்ச்சியாக நடத்துவதென்பது கடினமான காரியம். அதனை திறமையாக நடத்தி வருவதுகண்டு ஓர் இசைக்கலைஞன் என்ற வகையில் பெருமைப்படுகின்றேன். வளர்க தங்கள் முயற்சி, என் வாழ்த்துகள் இத்துடன் ஒரு வருட சந்தா அனுப்பியுள்ளேன்.

ஒரு திருத்தம் : சென்ற இதழில் தாங்கள் இன்னிசை இளவல் இளையராசா அவர்கள் தமிழக விருது பெற்றது ஒட்டி, தலையங்கம் எழுதியிருந்தீர்கள் நன்றாக இருந்தது ஆனால் இளையராசா அறிமுகப்படுத்தி வெற்றிகண்ட குரல்களின் வரிசையில் நானும் ஒருவன் என்பதை அடக்கத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன், திரு. மலேசியா வாசுதேவனுக்குப் பிறகு என்னைத்தான் அறிமுகப்படுத்தினார். அதற்கு பிறகுதான் ஜென்சி மற்றும் பலபாடக, பாடகிகளையும் அறிமுகப்படுத்தினர் 'கர்ஜனை' 'பன்னீர்புஷ்பங்கள்' படங்கள் மூலம்தான் வெளியில் வந்தேன். இருப்பினும், அதற்கு முன்பே அவரிடம் பாடியுள்ளேன். இன்னும் வளர்ந்து வரும் கலைஞனாக இருக்கும் நான், அவரால் அறிமுகப்படுத்தப்பட்டவன் என்பதை இங்கே சொல்ல கடமைப்பட்டுள்ளேன்.

T. K. S. கலைவாணன்
இசைக்கலைஞன்
திரைப்பட பின்னனி பாடகன்.

தங்கள் 'இயலிசை' இசைக்கலை இதழ் கிடைக்கப்பெற்றேன். மிக்க மகிழ்ச்சி. தங்கள் பணி செவ்வனே இயங்க இறைவனை வேண்டிக் கொள்கின்றேன். விரைவில் சந்தா அனுப்புறேன்.

'கலைமாமணி'
திருவாளபுத்தூர்
TA கலியமூர்த்திதவில கலைஞன்



# அருள்திரு தேவி கருமாரியம்மன் திருக்கோயில்

திருவேற்காடு, சென்னை-77

## ஆடிப்பெருவிழா நிகழ்ச்சிகள்

இரவு 7 மணி
18—8—82 T. M. S. செல்வகுமார் குழுவினர் மெல்லிசை
25—7—82 சீர்காழி S. கோவிந்தராசன் குழுவினர் இன்னிசை
1—8—82 சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம் "
8—8—82 B. R. இராசகோபாலன் "
காலை 10 மணி "
15—8—82 K. வீரமணி, சோமு
இரவு 7 மணி இந்திரா, சாரதி பக்தி பாடல்கள்
22—8—82 சங்கர்-கணேஷ் குழுவினர் மெல்லிசை
காலை 10 மணி
29—8—82 குருவாயூர் பொன்னம்மாள் குழுவினர் இன்னிசை
இரவு 7 மணி காஞ்சி S. K. ரங்கமணி நாடகம்